<u>காலைப் பிறை</u>

சிலந்திக்கு வலை பின்னவும், தேனீக்குத் தேன் சேர்க்கவும், தாமரைக்கு மலரவும் யார் கற்றுக் கற்றுக் கொடுத்தனர்? யானைக்கு அதன் அறிவை அளித்த இறைவன் ஸ்திரீகளுக்கு மட்டும் அவர்களுக்குரிய சக்தியை அளிக்காமற் போவாரோ? * தொத்திலுள்ள தாமரை மலர்கள் யாவும் நாயகனை கதிரவனை வரவேற்பதற்கு சித்தமாய் இருப்பன போன்று விளங்கின * ஆஹா! ராஜகுமாரியின் மொழிகள் மிகவும் சாந்தமாயும் வெண்ணெய் போலும் மிருதுவாயும் இருக்கின்றன * தூக்கமானது அவளைப்போல் உலகமறியாதவர்களுக்கு ஏற்பட்டதேயன்றி மனநோய் கொண்டவனுக்கு அன்று. அவனுக்குப் பொழுது விடிவதே தூக்கமற்ற இரவுக்கு மருந்தாகும் * லேசான காற்றும் பறந்து செல்லும் மேகத்தின் மத்தியில் இலைகளைப்போன்று நிலையற்ற சஞ்சல சுபாவம் உள்ளவர்களென்று தங்கள் பெண்ணினத்தையே அவள் பழித்துப் பேசினாள். * பாடலே புஷ்பமே, உன் செவ்விதழ்கள் எவ்வளவு அழகாகயிருக்கின்றன! உண்மையிலே இப்பெண்மணியின் நாக்கிலும் சரஸ்வதி தான் தாண்டவமாடுகிறாள். * பெண்ணல்லவா? உதடுகளில் தேன் சொட்டுவதும் அவர்கள் பற்களில் வாழைமன்றோ நிறைந்திருக்கிறது? * யௌவனத்தின் சாரமெல்லாம் திரண்டு ஒரு பெண் வடிவம் எடுத்து வந்தது போல் விளங்கினாள் அந் நங்கை. * உள்ளும் புறமும் ஒன்று என்று கருதினால் கொட்டாங்கச்சியைப் பார்த்து உள்ளிருக்கும் ருசிகரமான தேங்காயை எப்படி அறிந்துக் கொள்வீர்கள். * வெளிக்கு அமைதியாகத் தோன்றினும் உள்ளே வாழ்வே தீக்கொண்டிருக்கும் என்பதன்றோ தங்கள் அனுபவம். * இச்சிறுமி தன் செவ்விதழ்களினின்று வரும் சில இனிய சொற்களினால் என் உறுதியைக் கலைத்தனளே * அவன் எண்ணத்தினால் அலைக்கப்பட்ட உள்ளத்துடன் சென்றான் * பகலுக்கும் இரவுக்கும் இடையிலுள்ள சந்தியைப் போல் பால்யம் யௌவனம் இவ்விரண்டும் அற்றவிடத்தில் அவள் விளங்குகிறாள் * யுவதியென்றாலும் இன்னும் பால்ய வயது முற்றும் நீங்கவில்லை. காலையில் அப்பொழுதுதான் இதழ்களை விரித்துவரும் மலர்களைப் போலவே, தன் கையால் கொண்டுவரும் அப்புஷ்பங்களை யொத்தே விளங்குகிறாள். அசேதனமான அம்மலரைக் காட்டிலும் அவள் ஒன்றும் மேல் அல்லவா? * ஒர் தினம் மேல்மாடியில். நின்மீது இசைதாங்க் காற்று அடித்தால், காற்று அடித்துச் சென்ற பாடலும் அம்மேனியின் இளையின் முறுவலுக்கும் சப்தம் கேட்பதுபோல், அவள் பேச்சு இப்பொழுதும் என் காதில் ஒலிக்கிறது. * அதிகாலையின் குளிர்ந்த பனியாலும் இரண்டு உருவெடுத்தன போலும், தன் இருதயத்தின் மறைந்து சாம்பலான காதல் புத்துயிர் பெற்று எழுந்து தன் இன்னம் ஒரு பெண் வடிவத்தின் தோன்றுவது போலவும் அவள் விளங்கினாள் * அசத்தியத்திற்கு எவ்வளவோ உருவங்கள் உண்டு. இத்தகைய சௌந்தரிய வடிவத்திலும் அது தோன்றக்கூடுமல்லவா? * இழந்த காதல் யாவும் வெறும் சேர்க்கையையன்றி யாவும் பொருந்திய ஓர் உயர்ந்த சேர்க்கையை பெறவில்லை என்றாள். * ஆண், பெண் இருபாலாரிலும் மனம் தன்னைப் பற்றிய நினைவு இல்லாமல் ஒன்று மற்றொன்றின் அழகையே விரும்பி நிற்கிறது. * கல்லைக் கண்டு மோகித்த பைத்தியக்காரனை போல் இருக்கிறது தங்கள் நிலைமை * பயமும் சந்தேகமும் கொண்டவனுக்கு நல்ல தூக்கம் எப்படி உண்டாகும் * ஒருமுறை வாழ்க்கை கப்பல் உடைந்து நின்றாலும் நான் மீண்டும் இவ்வாழ்ந்த கடலின் எப்படி பிரயாணம் செய்ய முடியும்? * தைரியமும் நம்பிக்கையும் இல்லாமல் எவன் ஒரு காரியத்தைச் செய்யப் பயப்படுகிறானோ அவன் ஒருக்காலும் ஜயம் அடையமாட்டான் * அசாத்தியமானவற்றை விரும்புபவர்கள் நன்மையை அடையமாட்டார்கள் * உன் மேனி சௌந்தரியம் பொருந்தியதுதான். ஆனால் உன் ஹிருதயம் எவ்வளவு கடினமானது! தேனும் இனிய இசையாலும் மொழிகள் என்னவோ வேம்புதான். * அவள் வார்த்தையைக் கேட்ட அவன் சாட்டையால் அடிக்கப்பட்ட ஒரு ஜாதி அசுவம் போல் துணுக்குற்றான் * நீ எவ்வளவு சிரித்தாலும் உன் சிரிப்பு என் சோகத்தின் சங்கீதம் போலத் தோன்றுமேயொழிய வேறல்ல * நான் இல்லாத வாழ்வு அர்த்தமற்ற வார்த்தை போலவும், சந்திரனற்ற இருண்ட வானம் போலவும் சூன்யமான தொன்றே *

<u>நாது கதைகள்</u>: ராஜசயனத்தில் படுத்து இந்திரபோகத்தைக் கொஞ்ச கொஞ்சமாக அனுபவித்துக் கொண்டிருந்தேன். *. பிரகாசம் அவனுக்குப் பிடிப்பதில்லை. நிலவு அவனுக்கு சந்தோஷமும் அளிப்பதில்லை. *. அவள் மௌனமாக இருந்ததைக் கண்டு, மௌனம் சம்மதத்திற்கு அறிகுறி என்று நிச்சயித்தான். *. இந்த வருத்தம் தோய்ந்த அன்பு வார்த்தைகளின் மதிப்பை யார் அறிவார்கள். * துக்கத்தை யாராவது பகிர்ந்து கொண்டால் கஷ்டத்தைக் கேட்டு மனம் இரங்கினால், அன்பு வார்த்தைகளை மனம் வைத்து கேட்டால் உலகத்தில் அவர்களைவிட பந்து ஒருவரும் இருக்கமாட்டார்கள். *. புகை வளைத்தை நிராயாட்ச் செய்தது. *.